# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்



**துன்முகி – சித்திரை – 2016 – ஏப்ரல்**

18.04.2016 அன்று நடைபெற்ற
நாச்சியப்ப சுவாமிகள் கவின்
கலைக் கல்லூரித் தொடக்க விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

துன்முகி – சித்திரை – 2016 – ஏப்ரல்     இதழ் – 46

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. ம. கார்மேகம்

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்




மதியணி வேணி மங்கலப் பாண்டி
மன்னவன் தேவி மதுரைக் கரசி
மாமுனி அகத்தியன் நாவில் மலர்ந்த
மதுரத் தீந்தமிழ் மாந்திய புலவர்

நதியணி நாதன் நாவலர் தலைவன்
நடத்திய சங்க நாயகன் கூடல்
நாடிதை ஆண்ட நற்பெருங் கடவுள்
நாயகி நாமம் பற்பல தாங்கித்

துதியணி அடியர் சொற்றமிழ் மாலை
துலங்கிடப் பூண்டு தோன்றாத் துணையாய்த்
தொல்சமி வனத்தில் தூயதேன் ஆற்றில்
துணையென இருக்கும் திருநெல்லை அன்னை

மதியணி வதனம் மறவா ராகி
மாதவத் துறவி ஆண்டவர்க் கருள்செய்
மங்கலை சாலி மாதவள் பாத
மலர்களைத் தொழுவார் மாதவர் ஆவார்

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

நாணம் என்பது பெண்களுக்கு மட்டுமே உரிய பண்பு எனச் சொல்வது தவறு. நாணம் என்ற உயர்பண்பு இரு பாலருக்கும் பொதுவானதே; நல்லன, தீயன எனப் பகுத்தறியும் விவேகம் பெற்ற மனிதன் தீயவற்றைச் செய்வதற்கும், பேசுவதற்கும், கேட்பதற்கும் வெட்கப்படுவதே நல்லவர்கள் ஏற்கும் பண்பு.

காந்தியடிகள் சொல்வது போல, கண்களால் தீயவைகளைக் காணாதீர்கள். வாயால் தவறான வார்த்தைகளைப் பேசாதீர்கள், காதாலே தீயவற்றைக் கேட்காதீர்கள். இந்தப் பண்பு ஒழுக்கம் உடைய அனைவருக்கும் பொதுவானதே.

நம் தாய் தந்தையர் பெயருக்கு இழுக்கு வரும் எந்தச் செயலையும் செய்வதற்கு வெட்கப்பட வேண்டும். இதேபோல் நம்முடைய குடும்ப பாரம்பரியம் நாம் கற்ற கலாச்சார பாரம்பரியம், நாம் தொழில் / பணிசெய்யும் நிறுவனத்தின் பாரம்பரியத்திற்கும் பங்கம் வருமேயானால் அத்தகு செயலைச் செய்வதற்கு வெட்கப்பட வேண்டும்; நிராகரிக்க வேண்டும்.

சான்றோர் சபையிலே ஓங்கிக்குரல் எடுத்துப் பேசுவதற்குச் சிந்திக்க வேண்டும்; நாணப்பட வேண்டும். குறள் அல்லாத விசயங்களைப் பேசுவதைத் தவிர்க்க வேண்டும். அன்றாட வாழ்க்கையில் நம்முடைய குடும்ப பாரம்பரியத்தை மீறிய செயல்களில் பெண்களைத் தவறான நோக்கத்தோடு பார்ப்பதும், கள் உண்டு மயங்கிக் கிடப்பதும் நாலு பேருக்கு மத்தியில் விதண்டாவாதம் பேசிச் சண்டையிடுவதும் நாணுவதற்கு உரியசெயல். திருவள்ளுவர் உயிர்,

உறுப்புகள் ஆகியவை உடலைச் சேர்ந்தன; ஆனால் பண்பு என்பது நாணத்தைச் சார்ந்தே உள்ளது என்பதை

1. ஊனைக் குறித்த உயிர்எல்லாம் நாண்என்னும்
   நன்மை குறித்தது சால்பு
2. குலம்சுடும் கொள்கைபிழைப்பின் நலம்சுடும்
   நாண் இன்மைநின்றக் கடை

என்கிறார்.

நாணத்தைத் துறந்து அடாத செயல் செய்தால் குலப் பெருமை அழியும். நாணம் என்கிற பண்பு நம் தீயசெயல் கண்டுவெட்கி நம்மைவிட்டு விலகும் என்று ஆணித்தரமாகக் கூறுகிறார். இந்த இரண்டு குறளும் மனித குலத்திற்கு மிகமிக இன்றியமையாதவை என்பது தெளிவுபடுகிறது. நற்குடிப்பிறந்தோரும் தீயசெயல் செய்வதை நாணுவது பண்பு.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை.*

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

### (சாப விமோசனப் படலம்)

நலம்மிகு செந்தமிழ் நாடு காப்பவன்
வலம்மிகு தரியலர் மடங்கல் ஏ(று)அனான்
பொலம்மிகு கருங்கழல் பொலிந்த தாளினான்
உலம்மிகு தோளினான் உலப்(பு)இல் கல்வியான் 1

மரு(வு)அரு கயல்கொடி வலன்உ யர்த்தவன்
பொருவரும் கொடையினில் புகழின் மேன்மையான்
வெருவரும் ஆண்மையான் வீர சேனன்என்(று)
ஒருவரும் பெயரினான் ஒருவன் வாழ்ந்தனன் 2

அன்னவன் அரசுசெய்(து) அமரு நாள்வயின்
பன்னரும் மரம்செறி படர்வெங் கான்புகூஉ
என்னரும் சூழ்தர ஏறு போல்உலாய்
மின்அரும் வேல்கொடு வேட்டம் ஆடுவான் 3

வல்லியம் குடாஅடி மடங்கல் வாரணம்
சல்லியம் கவயம்விண் தாம்கு ரங்கமா
வெல்இயல் எயிறுடை எறுழி யேமுதல்
புல்லிய மாஎலாம் புரள வீட்டினான் 4

கண்ணுபல் விலங்(கு)எலாம் கடியும் எல்லையில்
கண்நுதல் அடிமலர் கமழும் சிந்தையான்
கண்உயர் மணிபொடி கதிர்க்கும் மேனியான்
கண்ணுவ முனிவன்ஆச் சிரமம் கண்ணுற்றான் 5

அத்தகு முனிவனால் அருமை மைந்தனில்
பொத்துபு வளர்த்திடப் பொலிவு மானமா
வித்தகம் உறஅவன் வெளிப்பட்(டு) இன்(பு)உறும்
ஒத்தபல் உணவுதேர்ந் துழிதந்(து) அன்(று)அரோ 6

உழிதரு கவரிமா உடலம் கீள்உறக்
கழிகொடும் கூர்ங்கணை கடாவி னான் ஒன்று
வழிமதுத் தாரினான் மற்றை மான்வெரீஇ
அழிதக அவனிவீழ்ந்(து) அலறி மாய்ந்ததே 7

கதறிவீழ் மானமாக் கழிந்த(து) ஓர்ந்துமேல்
பதறிஆ யிடைச்செலீஇப் பார்த்த கண்ணுவன்
அதிசினம் கொண்டனன் அழல்வி ழித்தனன்
எதிர்இது செய்தவர் யார்என்(று) ஓர்ந்தனன் 8

வளைதரு சிலையொடும மாண்ட அம்பொடும்
அளைதரும் மதிக்குலத்(து) அரசன் நிற்றலும்
உளைதர நோக்கினன் உருத்துச் சீறினான்
விளைதரு தயைஇலா வேந்த கேள்மதி 9

மகவின்யான் அருமையில் வளர்த்துப் போற்றிய
தகவுஉடை மானைநீ சங்க ரித்தலால்
மிகவடை வருத்தமே மேவி வெங்கொலை
புகவுடை வேடனாய்ப் போதிஎன்றனன் 10

முனிவரன் சபித்தலும் முன்னும் முன்னமே
நனிவரும் வேடுவன் ஆகிக் காவலன்
நனிவரும் கொலைத்தொழில் நாடி ஆற்றுபு
துனிவரும் காட்டிடைச் சுழன்(று)உ ளான்அரோ 11

இறைமகன் வேடனாய் இலங்கும் தன்மையை
அறைகழல் சேனைகாப் பாளர் ஓடுபு
முறைதெரி புரோகிதர் அமைச்சர் முன்சொல
நிறைபெரும் துயர்க்கடல் நீந்தி னார்அவர் 12

ஒருவகைதம் துயர்அகன்(று) உரிமை மைந்தனை
அருமணி முடிகவித்(து) அரசன் ஆக்கினார்
இருபுயத்(து) அவனிதாங்(கு) இராச சேகரன்
வெருவற உயிர்எலாம் காத்து மேவுநாள் 13

வேடுவன் ஆகிய வேந்தன் பல்வனத்(து)
ஊடுபல் மிருகமும் ஒருவக் கொன்றுகொன்(று)
ஆடுமுன் பவம்புரி அறத்தின் பேற்றினால்
நாடுநல் சமிவனம் நண்ணி னான்அரோ 14

புண்ணியச் சமிவனம் புகுந்த வேடுவன்
நண்ணிய நறுமதுப் பொய்கை ஞாங்கர்ஓர்
தண்ணிய தருநிழல் அமர்ந்து வைகினான்
பண்ணிய தீவினை பாறும் வண்ணமே 15

இருந்தவன் தனைத்தடத்(து) இயங்கு மீன்குலம்
திருந்துற நோக்கிஇத் திறல்கொள் மன்னவன்
அருந்திறல் முனிவனால் வேடன் ஆயினான்
பொருந்துற இவன்வினை போக்கு வாம்எனா 16

ஒன்றினுக்(கு) ஒன்(று)இனி(து) உரைத்துப் பின்னரும்
நன்றிகொள் கொடிமிசை நமைப்பொ றித்திடும்
வென்றிகொள் மன்னவன் வேடன்ஆகலாம்
இன்றுபார்த்(து) இருப்ப(து)என் என்றும் பேசின 17

பேசினமீன் எலாம் பிறங்க மேலெழீஇக்
கூசின அலவெனக் குதித்(து)அத் தீர்த்தநீர்
வீசின திவலையா வேடன் சென்னிமேல்
பூசின எனஅது போர்த்த போதிலே 18

கொலைபுரி கருத்(து)எலாம் குலைந்து போயின
நிலைபுரி புண்ணிய நினை(வு)உண் டாயின
மலைபுரி அறக்கடை மாசுதீர்ந்தன
தலைபுரி உணர்ச்சியில் தவா(து)எ ழுந்தனன் 19

பொலிதரு விதியின்அப் புனலில் மூழ்கினன்
மலிதரு வேட்டுவ வடிவம் நீத்தனன்
ஒலிதரு மன்னவ உருவம் எய்தினன்
கலிதரு பாந்தளில் கழிந்த திங்கள்போல் 20

புண்ணிய விபூதியும் பொருந்தப் பூசினன்
மண்ணிய கண்மணி மாலைதாங்கினன்
எண்ணிய ஐந்தெழுத்(து) இதயத்(து) எண்ணினன்
தண்ணிய ஆலயம் சார்ந்து ளான்அரோ 21

கொற்றவாள் ஈசனைக் குறித்து மாதவர்
முற்றஆ தரம்புரி முனிவின் எல்லையைப்
பற்றஆ தரத்(து)அடி பணிந்து போற்றினான்
இற்றதாம் நம்வினை என்று துன்னினான் 22

மதிஉதித் திடுமுனம் கலந்து தாமரைப்
பொதிஅவிழ் மாமதுப் பொய்கை மூழ்குபு
விதிகெழு தருப்பணம் விரும்பி ஆற்றுபு
விதிகெழு பிதிர்எலாம் வாழச் செய்தனன் 23

காலம்தப் பாதுபோய்க் கண்நு தல்பிரான்
சீலம்தப் பாததாள் சேவைசெய்தலும்
கோலம்தப் பா(து)அமர் குமரி தாள்துணை
மூலம்தப் பாதுபோற் றுதலும் முற்றுநாள் 24

இத்தகு நியதியில் இயைந்து மன்னவன்
உத்தம குணங்கள்அவ் ஒழுக்கம் ஆதிய
எத்தகை யனவும்வந்(து) ஏவல் கேட்குமால்
அத்தல வாசம்செய்(து) அமர்ந்(து)இ ருந்தனன் 25

மன்னவன் வே(டு)உரு மாற்றி வாழ்வதைப்
பொன்அவிர் காளிமா புரத்தில் வாழ்தரும்
பன்னரும் புரோகிதர் அமைச்சர் பார்த்திபர்
என்னரும் கேட்டனர் உவகை எய்தினார் 26

அந்நகர் நின்றும்அக் கணத்(து)எ முந்தனர்
பன்னரும் கொடிநெடும் பதாதி சூழ்தர
முன்னரும் பன்னிய முகிலின் ஆர்த்திட
என்னரும் சமிவனம் எய்தி னார்அரோ 27

அரசனைக் கண்டனர் அடிப ணிந்தனர்
பிரசநன் மலர்த்தொடைப் பெருந்த காய்நினை
விரகரும் தவத்தினே மென்மை பெற்(று)உளேம்
பரசநின் றனம்எனப் பகர்ந்து போற்றினார் 28

வெந்திறல் வரிகழல் வீரசேனனும்
தந்திரத் தலைவரைச் சதுர மைந்தரை
முந்திய புரோகிதர் முதலி யோர்களை
மைந்தனை அளவளாய் மகிழ்ச்சி பூத்தனன் 29

அருநகரி னுக்(கு)எழுந்(து) அருள வேண்டும்என்(று)
ஒருவரும் அமைச்சரை உள்ளிட் டார்எலாம்
பொருவரு மலர்க்கழல் பூண்டு வேண்டலும்
நிருபனும் இயைந்தனன் இறைந்(து)அது ஆர்ப்பரோ 30

சங்குகள் முழங்கின தாரை பொங்கின
குங்குமக் கொங்கையர் குலவி ஆடினர்
எங்கணும் எழுந்தனர் எண்ணில் வீரர்கள்
மங்கலக் களிற்றின்மேல் மன்னவன் ஏறினான் 31

பொருவரும் காளிமா புரத்தை நண்ணுபு
மருவரும் வீதியை வலங்கொண்(டு) எய்தியே
திருவளர் மாளிகை சென்று புக்கனர்
உருவளர் அரியணை உவந்து வைகினான் 32

பகர்மக னேபுவிப் பாரம் தாங்கிடத்
தகரரும் கொற்றவாள் ஈசர் தாள்இணை
நிகர்அரும் தன்மனம் நிருவிப் பற்பல
புகர்அரும் போகமும் புசித்து வாழ்ந்தனன் 33

பலபகல் இங்ஙனம் பாரில் வாழ்ந்துபின்
அலகரும் சிவபிரான் அருள்தி றத்தினால்
நலம்மிகு சிவபதம் நண்ணி வாழ்ந்தனன்
விலகரும் பெரும்புகழ் வேறு வீரசேனனே 34

## வேறு

சாபவிமோ சனம்எனும்பேர் தன்முதல் தாங்கியதால்
பூபதியே அனையமது புட்கரணி அதுகொடுக்கும்
மாபலம்போல் எத்தீர்த்தம் வையமிசைத் தரும்அமரர்
ஆபஅதில் மூழ்கிடுவார் ஐயம்இலை எஞ்ஞான்றும் 35

மதிகதிரை அராவிழுங்க வருகாலம் மதித்தோற்றம்
துதிஅமைகார்த் திகைமாதம் சோமவாரம்கருது
திதிஅமையும் துலாமாதம் செறிமகரமாதநலம்
பதிவிடுபுண் ணியகாலம் பகரும்இவை முதலான 36

சொற்றிடுபுண் ணியகாலத் தோற்றம்உணர்ந்(து) அத்தீர்த்தம்
பற்றிடும்அன்(பு) உறமூழ்கிப் பனவர்முத லியர்க்கங்கை
உற்றிடுபொன் மணிஆதி உதவுவார் பெரும்பேற்றைக்
கற்றிடுநான் முகனாலும் கரையமுடி யா(து)அம்மா 37

வன்னிவனம் வசிப்போரும் மதுப்பொய்கை குடைவோரும்
நல்நியமத் தொடும்புவன நாதன்அடி பணிவோரும்
கன்னிஉமை திருநெல்லை காமர்அடி பணிவோரும்
முன்னிஅடை பெரும்பேற்றை மொழிவாரும் உளேரேயா 38

கெழுதகைய வன்னிவனச் சேத்திரத்தின் மான்மியங்கள்
முழுதும்எடுத்(து) உரைத்திடுவோர் உலகத்(து) இலைஉணர்தி
பழுதுதவிர் அத்தலத்து மேவியவர் பரம்பரனே
கொழுதுவரி வண்(டு)உழுதார்க் கொற்றவசொற் றிடவல்லோன் 39

கற்றஆ தரத்தினரே காமிக்கும் வன்னிஎனக்
கொற்றவாள் ஈசர்கதை கூறும்இடத்(து) அள(வு)இலவாம்
உற்றஆ தரத்(து)ஒருநாம் உணர்ந்த(து)உரைத் தனம்உணர்தி
பொற்றவாள் வடிவேந்தே என்றும்அகன் றனமன்னோ 40

விருப்பம்மிக உரைத்தஎலாம் மேதகும்அன்(பு) உறக்கேட்டுத்
தெருட்பொலநெஞ் சினன்ஆகித் திகழ்தரும்இம் மான்மியத்தால்
கருப்பழகாப் பெரும்பிரம ஞானமும்கை வசம்ஆயிற்(று)
ஒருப்படுமுத் தனும்ஆனேன் என்றுநமை உறத்தொழுதான் 41

பன்முறையும் தொழு(து)எழுந்து பழிச்சிவிடை கொண்(டு)ஏகிப
பொன்மலையில் பெருமானார் புவனேசர் பதம்போற்றி
நன்மலையில் பொலிதோளான் ஆடுறுதன் நகர்புகுந்து
மின்மலையும் முடிகவித்து வீற்(று)இருந்தான் உல(கு)ஓம்பி 42

தேராண்ட பெரும்படையான் சீவன்முத்தன் ஆய்இருந்து
பாராண்டு புவனேசர் பணிவிடையும் மிகப்புரிந்து
பேராண்ட புலக்குறும்பு போக்கும்ஒரு கைஇனியே
நாராண்ட மனத்தொடும்பின் விதேகமுத்தி நண்ணினான் 43

பளகில்பெரும் குணவீர பாண்டியன்என் பவன்அன்பால்
உளநெகிழும் படிபடையாய் ஒளிர்பிரம ஞானத்தைத்
தளர்(வு)அறப் பெற்(று) அடைந்ததனைச் சாற்றினோம் தெரிந்தனையே
வளம்மிகுமா தவஎன்று மலையமா தவன்உரைத்தான் 44

கேட்டசை மினிமுனிவன் கிளர்உவகை பொங்கிஎழ
வாட்டம்முழு வதும்ஒழிந்து சித்தசுத்தி வாய்ந்தானாய்
ஈட்டரிய பிரமஞா னமும்எய்தப் பெற்றானாய்
நாட்டம்மிகு குறுமுனியன் நன்மலர்த்தாள் இணைபணிந்தான் 45

ஐயனே நின்அருளால் அருந்தவம்பல் நாள்முயன்றும்
எய்தரிய சித்தசுத்தி பிரமஞா னமும்எளிதில்
மெய்வகைபெற் றனன்அடியேன் விளம்புவ(து) என் இனிஉய்ந்தேன்
உய்வகைமற்(று) இதில்வேறும் உண்டுகொலோ எனத்துதித்தான்46

துதிஅமையப் புரிந்துபினும் தொழுதுவிடை கொண்(டு)ஏகி
மதிஅமையும் வன்னிவன மாதேவர் தமைப்போற்றித்
திதிஅமையும் தன்னுடைஆச் சிரமம்சேர்ந்(து) உறவாழ்ந்தான்
கதிஅமையத் தனைஅடைந்தார் பலர்க்கும்இது கட்டுரைத்தே 47

என்றுநை மிசவனத்து மாதவர்கள் இனி(து)உணர
நன்றுதரு சூதமுனி நாடிஉரைத் தனன்ஆக
இன்றுநின(து) அருளாலே இத்தகுமான் மியம்கேட்டே
அன்றுசை மினிஅடைந்த(து) அடைந்தனம்யாங் களும்என்று 48

சூதமுனி அரன்பாதம் தொழுதுமுனி வரர்பலரும்
மேதகுமா மகம்முடிந்து விரும்பும்அச் சூதனொடும்
ஓதநெடுங் கடல்உலகம் உவந்துதொழும் வன்னிவன
மாதவம்புக்(கு) இனி(து)அமர்ந்து மாதேவன்தனைத் தொழுவார் 49

பொங்கிஅலை புரட்டுமது புட்கரணிப் புனல்மூழ்கி
எங்கள்குல தெய்வம்எனும் எழில்கொற்ற வாள்ஈசர்
தம்கழலும் நெட்டைஉமை தண்கழலும் தொழு(து)ஏத்தி
மங்கலநல் விடைபெற்று மறுத்துறை மிசம்புகுந்தார் 50

இன்னபுரா ணத்தைஇனி(து) எழுதுவோர் எழுதுவிப்போர்
பன்னரும்சொல் பொருள்உரைப்போர் உரைப்பவர்தம் பால்கேட்போர்
என்னரும்எண் ணரும்போகம் இப்புவியில் நுகர்ந்(து)ஈற்றில்
நன்னர்ஒளி மிகுபிரம ஞானியராய் இன்(பு)உறுவார் 51

பொருள்பலவும் இனி(து)அமைஇப் புராணம்அமர் கிருகத்து
வெருள்பலசெய் பூதபிசா(சு) ஆதிகளும் மேவாவால்
இருள்பலசெய் வறுமைஅற இந்திரைநீங் கா(து)அமர்வாள்
அருள்பலபுத் திரர்பொலிய அமைந்துவிளங் குவர்மாதோ 52

பிரியமிகும் கொற்றவாள் ஈசர்பெரும் சரித்திரமாய்
அரியபுகழ் வேதாந்தம் முழுவதும்நன்(கு) அமைதலினால்
உரியஅதி காரிகளாய் உள்ளவர்இப் புராணத்தைத்
தெரியஅமை குருமுகமாத் தெளிதரில்தன் னியர்ஆவார் 53

திகழ்தரு சின்மயரூப சிதம்பரதே சிகன்மொழிய
இகழ்தருதல் இலாதவன்சொல் ஏற்றபெரும் புண்ணியத்தால்
புகழ்தரும்இப் புராணத்தைப் பாடினேன் புன்மைஎலாம்
அகழ்தருபேர் அறம்முதலா யாவும்அடைந் தனன்யானும் 54

### வேறு

இலங்குபுகழ் வன்னிவனம் வாழ்கஒளிர் கொற்றவாள் ஈசர் வாழ்க
கலங்குதல்தீர்த்(து) எனைஆண்ட நெல்லைநா யகிபெரிய கருணை
வாழ்க
மலங்குதல்இல் இத்தலத்து மன்னிவளர் மாதவர்கள் வாழ்க வாழ்க
நலம்குலவு மணிமன்(று)உள் நடம்நவில எடுத்தபொன்தாள் நாளும்
வாழ்க

*சாபவிமோசனப் படலம் நிறைவுற்றது.*

*கோவிலூர்ப் புராணம் நிறைவுற்றது.*

# எவரும் தாழ்ந்தவர் அல்லர்

## (ம. கார்மேகம்)

இந்த உலகத்தில் படைக்கப் பெற்ற உயிரினங்கள் பல. புல், பூண்டு, மரம், செடி, கொடி என்று தாவரங்கள் பெயரளவில் வேறுபட்டவை. அவையனைத்தும் மனிதர்களின் தேவைக்காகவே வளர்கின்றன. இலை, பூ, காய், கனி என்று உதவுகின்ற தாவரங்களிடையே மனிதன் வேறுபாடு கருதுவதில்லை. பிஞ்சென்றும் கனியென்றும் பயன்படுத்தும் மனிதன் அவற்றில் குறை கூறுவதில்லை. இவ்வாறு பயன்தரும் தாவரங்களை மனிதருக்கு இணையான உயிராகக் கருதியதால்தான்,

“வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம்” வள்ளலார் வாடினார்.

பறவைகளையும் விலங்குகளையும் கூட வேறுபாடு கருதாமல் தன்வீட்டில் மனிதன் வளர்க்கிறான்; நேசிக்கிறான். அவை துன்புற்றால் தானும் துன்புறுகிறான்; அவற்றின் மகிழ்ச்சியில் தானும் மகிழ்கிறான். அதற்குக் காரணம் “காக்கை குருவி எங்கள் ஜாதி” என்று மனிதன் எண்ணுவதால் தான்.

“மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம்மாநிலத்தே” என்று சொன்னார்கள் முன்னோர். அதற்கேற்ப மனிதனாய்ப் பிறந்து ஆறறிவு கொண்டவனாய் வளர்கிறான்; வாழ்கிறான். இவ்வாறு ஆறறிவு கொண்ட மனிதர்கள் கூடி வாழ்கின்ற சமுதாயத்தில் உயர்வு தாழ்வு காணலாமா ?

ஒவ்வொரு மனிதனும் சமுதாயத்தில் ஒரு பகுதி; தந்தை, தாய், அண்ணன், அக்காள், தம்பி, தங்கை, என்று கூடி வாழ்கின்ற குடும்பத்தைப் போன்றது தான் சமுதாயம். குடும்பத்தில் உள்ள உறவு முறைகள் தாம் வேறு; அந்த உறவுகளுக்குள் வேறுபாடு இல்லை. அதுபோலத்தான் சமுதாயத்தில் மனிதர்களுக்குள் வேறுபாடு இல்லை என்பதை அறிய வேண்டும்.

சமுதாயத்தில் பங்கேற்கும் ஒவ்வொருவரும் சமுதாயத்தின் தேவைக்காக, மனித வாழ்வின் தேவைக்காக வாழ்பவர்கள். தங்களுக்குரிய கடமைகளை, தொழில்களைச் செய்து சமுதாயம் மேம்பட உழைப்பவர்கள். எந்தவொரு கடமையும் தொழிலும் தேங்கிவிட்டால், சமுதாயம் முன்னேற முடியாது.

அனைவருக்கும் தேவையான உணவு, உடை, உறையுள் என்பவற்றைப் படைத்துக் கொடுப்பவன் மனிதன். பொருள்கள் கிடைக்குமிடத்திலிருந்து கொண்டு வந்து எல்லோரும் பயன்பெறும்படி கொடுப்பவனும் மனிதன். ஒருவர் மற்றவர்க்காகத் தனித்தனித் தொழிலை, கடமையை ஏற்றுக் கொண்டு சமுதாயத் தேவைகளை நிறைவு செய்யும் போதுதான் மனித சமூகம் வளர்ச்சி அடைகிறது. இந்தக் கடமைகளைச் செய்வோரில் யார் உயர்ந்தவர் ? யார் தாழ்ந்தவர் ? என்று வரையறை செய்ய முடியுமா ?

எல்லோரும் உண்ணும் உணவு நாழி உணவுதான்; உடுக்கும் ஆடை இரண்டேதான். இதில் ஏற்றத்தாழ்வு இல்லை என்று சான்றோர் உணர்த்தினர். “இட்டார் பெரியோர்; இடாதோர் இழிகுலத்தோர்” என்றனர். அன்பை இட்டவர் பெரியோர்; அன்பைக் காட்டாதோர் இழிகுலத்தோர் என்றனர்.

சமுதாயத்தில் இடம்பெற்றுள்ள தொழில்கள் பல. உழவு செய்தல், கட்டடம் கட்டுதல், கருவிகள் செய்தல், சலவை செய்தல், முடி திருத்துதல், துப்புரவு செய்தல் என்பவற்றை ஒருவரே செய்ய முடியாது. அவற்றைப் பலர் மேற்கொள்கின்றனர். இதனால் அவர்களிடையே வேறுபாடு காட்ட முடியாது.

தேருக்குச் சக்கரமும் வேண்டும்; சக்கரம் கழன்று விழாமல் தாங்கித் தேர் ஓடுவதற்குத் துணை செய்யும் அச்சாணியும் வேண்டும். இவற்றில் ஒன்றைவிட மற்றொன்று உயர்ந்தது என்று எதைக் கூற முடியும் ? சமுதாயம் என்னும் தேர் ஓடுவதற்குப் பல தொழில்கள் புரிகின்றவர்களில் உயர்வு தாழ்வு கற்பிப்பது சரியாகுமா?

உழவு செய்தல், வரப்புக் கட்டுதல், நாற்றுப் பறித்தல், நாற்று நடுதல், களை எடுத்தல், கதிர் அறுவடை செய்தல், கதிர் அடித்தல் என்று பல வேலைகள் விவசாயத்தில் உள்ளன. இந்த வேலைகளில் எது உயர்ந்தது ? எது தாழ்ந்தது ? இந்த வேலைகளைச் செய்பவர்களில் உயர்ந்தவர்கள் யார் ? தாழ்ந்தவர்கள் யார் ? எல்லோரும் ஒருசேர உழைப்பது ஒரு பயனுக்காகத் தானே !

ஒரு கட்டடம் கட்டுவதற்கு மணல், செங்கல், சிமெண்ட், தண்ணீர் போன்ற பொருள்கள் தேவைப்படுகின்றன. இவற்றை வேண்டிய அளவில் சேர்த்துக் கொண்டால் தானே கட்டடம் கட்ட முடியும்! ஏதேனும் ஒன்றைத் தீண்டாவிட்டால் கட்டடம் கட்ட முடியுமா ? எதையும் ஒதுக்கிவிட முடியாது.

இதுபோலத்தான் சமுதாய வாழ்க்கையில் பங்கேற்கும் மனிதர்கள் அனைவருமே ! சமுதாயத் தேவைகளுக்காகப் பரவலாகத் தொழில்களை எடுத்துக்கொண்டு செய்பவர்களைத் தாழ்ந்தவர் என்று கூறுவது முறையா ?

தொழில் அடிப்படையில் சாதிகளைப் பிரித்து வைத்துவிட்டு "அவர்கள் செய்யும் தொழிற்பயன் கிடைக்க வேண்டும்; ஆனால் அவர்கள் மட்டும் தாழ்ந்தவர்கள்" என்று கூறுதல் தகாது. எந்தத் தொழில் செய்தாலும் எல்லோரும் மனிதர்கள் தாமே ! தாவரங்களிடையே, பறவைகளிடையே, விலங்குகளிடையே நேயம் காட்டுவோர், மனிதர்களிடம் ஏன் வேறுபாடு கருதுகிறார்கள் ?

தொழில் அடிப்படையில் பார்த்தால் எந்தத் தொழிலும் தாழ்ந்தது இல்லை. அத்தொழில்களைச் செய்வோரிலும் உயர்வு தாழ்வு இல்லை.

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்ற வள்ளுவர் வாக்கை அறிந்து கொண்டால் எவரும் தாழ்ந்தவர் அல்லர் என்ற உணர்வு வளரும்; இந்த உணர்வு வளர, மனித நேயம் கொள்வோம் !

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

### பட்டினத்தார்

4 பிறவியால் வரும் துன்பங்களைப் பேசிய பட்டினத்தார் தொடர்ந்து மனிதனை மயக்கும் பெண்ணாசையால் ஏற்படும் துன்பங்களைத் தொடர்ந்து பட்டியலிடுகிறார். காதளவோடிய அதாவது காதுவரை நீண்ட விழிகளைக் கொண்டவராய் இடையில் புண்ணுடையவராய் இருப்பார்மேல் காதலையும் கருத்தையும் வைத்து மயங்கி உன்னுடைய இருதாள்களாகிய தாமரை மலர்களைத் தலையிற் சூடப்பாக்கியம் செய்யாத சங்கடத்தால் மிக வருந்தும் தமியேன் உன் பக்கத்திலே இருந்து அங்கும் இங்குமாக ஓடி அலைந்து ஐம்புலன்களாகிய கள்வர் கலகங்களை உண்டாக்கித் திரிகின்ற காடாக உள்ளது என் உடல்; நீரையும் மலத்தையும் உடைய பேழை; நல்வினை தீவினைகளுக்கான பெட்டகம். வாதம் பித்தம் கோழை ஆகியன குடிபுகுந்துள்ள சிற்றூர். அழுக்குடைய அற்பமான தோலால் மூடப்பெற்றது. உதிரம் நிரம்பிய குதிர் நாற்றமுடைய பாண்டம்; நான்கு முழம் உடுத்திய ஒன்பான் ஓட்டைகளை உடைய துண்டம். பேய்ச்சுரைக்காய் விளைகின்ற தோட்டம்; அடர்ந்த சுடலை. ஆசையாகிய கயிற்றினால் ஆட்டிவிடும் பம்பரம். ஓயா நோய்க்கிடமானது. கடலில் ஓடும் மரக்கலம் போன்றது. மாயத் தன்மைகளை உடையது; மரணக் கூண்டு. சோற்றால் ஆன துருத்தி. காற்றிலே பறக்கும் கருவிகளாலான பறக்கும் பட்டம்; விதியின் கட்டளைப்படி எமதருமன் வெட்டும் கட்டை; நான்கு முகங்களை உடைய பிரம்மா தைக்கும் சட்டை; ஈமக்கனலில் இடுகிற விருந்து. காமம் ஆகிய நெருப்பிலே கருகும் சருகு. கிருமிகள் நிறைந்த சருமத்தை உடையது. பிறவிக்கொடி படரும் கொம்பு. நடக்கும் போது மணத்துடன் நடக்கும் முடிவில் பிணமாய்க் கிடக்கும். ஊரிலே இருந்தாலும் உபாதையைத் தரும். காற்றுக்கு எதிரே குவித்த பஞ்சு போன்றது. காலைக் கதிருக்கு எதிர் நிற்கமாட்டாத கடும்பனி போன்றது. வானவில் போன்றது; நீர்மேற்

குமிழி என்று பலவாறு உடலின் அவலங்களைப் புலப்படுத்தி இறைவனை நோக்கி உன்னுடைய ஆனந்தத் தாண்டவம் காட்டியருள்க என்று கோவில் திரு அகவல் 2ஆம் பகுதியில் வேண்டுகிறார். அந்த அகவல் இதோ.

### கோவில் திருஅகவல் - 2

காதளவு ஓடிய கமகப் பாதகக்
கண்ணியர் மருங்கில் புண்ணுடன் ஆடும்
காதலும் கருத்தும் அல்லால்நின் இருதாள்
பங்கயம் சூடப் பாக்கியம் செய்யாச்
சங்கடம் கூர்த்த தமியேன் பாங்கிருந்து
அங்கொடு இங்கொடு அலமருங் கள்வர்
ஐவர் கலகமிட்டு அலைக்கும் கானகம்
சலமலப் பேழை இருவினைப் பெட்டகம்
வாதபித்தம் கோழை குடிபுகும் சீறூர்
ஊத்தைப் புன்தோல் உதிரக் கட்டளை
நாற்றப் பாண்டம் நான்முழத் தொன்பது
பீற்றல் துண்டம் பேய்ச்சுரைத் தோட்டம்
அடலைப் பெரிய சுடலைத் திடருள்
ஆசைக் கயிற்றில் ஆடும் பம்பரம்
ஓயா நோய்க்கிடம் ஓடும் மரக்கலம்
மாயா விகாரம் மரணப் பஞ்சரம்
சோற்றுத் துருத்தி துரற்றும் பத்தம்
காற்றில் பறக்கும் கரணப் பட்டம்
விதிவழித் தருமன் வெட்டும் கட்டை
சதுர்முகப் பாணன் தைக்குஞ் சட்டை
ஈமக் கனலில் இடுகிற விருந்து
காமக் கனலில் கருகும் சருகு
கிருமிக் கிண்டும் கிழங்கஞ் சருமி
பவக்கொழுந்து ஏறும் கனைகொழு கொம்பு

மணமாய் நடக்கும் வடிவின் முடிவில்
பிணமாய்க் கிடக்கும் பிண்டம் பிணமேல்
ஊரில் கிடக்க ஒட்டா உபாதி
கால்எதிர் குவித்த பூளை காலைக்
கதிர்எதிர்ப் பட்ட கடும்பனிக் கூட்டம்
அந்தரத்து இயங்கும் இந்திர சாபம்
அதிரும் மேகத்து உருவிலா அருநிழல்
நீரில் குமிழி நீர்மேல் எழுத்து
கண்துயில் கனவில் கண்ட காட்சி
அதனினும் பொல்லா மாயக் களங்கம்
அமையும் அமையும் பிரானே அமையும்
இமைய வல்லி வாழிஎன் றேத்த
ஆனந்தத் தாண்டவம் காட்டி
ஆண்டுகொண்டு அருள்கைநின் அருளினுக்கு அழகே

மூன்றாம் கோவில் திரு அகவலும் முதல் கச்சித் திரு அகவலும் நிலையாமைத் தன்மையையே எடுத்தோதக் காணலாம்.

அடுத்து அவர் பாடும் திரு ஏகம்ப மாலை நிலையாமையைத்தான் பேசுகின்றது. காலத் தச்சன் உடலாகிய இந்த மரத்தை வெட்டி வீழ்த்துகின்ற காலத்தில் கட்டியணைத்துச் சுகம் தந்த மாதரும் பெற்றெடுத்த மக்களும் கொட்டி முழக்கி அழுவதோடு மயானத்தில் கொண்டு போய் வைத்து விட்டு அப்பால் சென்றுவிடுவர். இதுதான் உலக இயல்பு. இவர் இதில் பெண்களால் ஏற்படும் அவலங்களை குலப்பெண்டிர்களை அல்ல - மயக்கும் பெண்டிரைக் கூறுகிறார்.

நாயகன் தன் கைகளால் அவளைக் கட்டியணைத்துத் துயில்கையில் அவன் கையை அப்புறம் தள்ளிவிட்டு அடுத்தவனைச் சென்று மருவிப் பின்னர் வந்து துயில்பவளை எப்படி நம்புவேன் இறைவா கச்சி ஏகம்பனே ! என்று பாடியவர் இறைவன் தம்மை ஆட்டுவிக்கும் தன்மையைஎடுத்தோதுகின்றார். நல்ல கயிற்றில் பூட்டிய சூத்திரப் பாவை அக்கயிறு தப்பினால் ஆட்டம் நிற்பது போல் நீ கயிற்றை விட்டால் உன்னாலும் ஆடிச் சலிப்பதன்றி என்னால் எதுவும்

ஆவதில்லை என்கின்றார். கையும் காலும் தூக்கத் தூக்க ஆடும் மரப்பாவையைப் பண்டைய இலக்கணம் எடுத்துக் காட்டுகின்றது. எனக்கு வேண்டுவது நல்லார் நட்பு; நின் வழிபாட்டில் வைத்த நேயம் இல்லாள் சுற்றம் மைந்தர் ஆகியோருடன் வாழ்கின்ற வாழ்வனைத்தும் வெளிமயக்கே. நான் மிகவும் பொல்லாதவன்; நல்ல நெறியில் நில்லாதவன்; ஐம்புலன்களை வெல்லாதவன்; கல்வி கொஞ்சமேனும் கல்லாதவன்; மெய்யடியார் நெறிவழிச் செல்லாதவன்; உன்னுடைய திருவடிமேல் அன்பு செலுத்தாதவன் ஆகிய நான் ஏன் மண்ணிலே பிறந்தேன் என்று வருந்துகிறார்.

பிறக்கும் போது என்ன கொண்டு வந்தேன். மண்மேல் இறக்கும் போது எதனைக் கொண்டு போவேன்? இருக்கும் போதே கிடைத்த செல்வத்தை இறக்கும் வரை பிறருக்குக் கொடுத்தறியாத குலாமரைப் பற்றி என்ன சொல்லுவேன்.

மனிதனுக்கு வருகின்ற துன்பங்களைப் பட்டியலிடுகிறார் பட்டினத்தார். அன்னத்திற்காகத் துன்பப்படுவது, அது இல்லை என்றால் இன்னும் நீங்காத பல துன்பங்கள். பெண்டிரைப் பற்றிய துன்பங்கள்; இவற்றை ஏகம்பனே நீதான் உருவாக்கியவன் என்று இறைவனின் மேல் பழியையும் போடுகிறார். கல்லாத தவறு உன்னை, எண்ணாத தவறு, நின் ஐந்தெழுத்தை ஓதாத தவறு, நின்னை வணங்காத தவறு, நின்னைப் பற்றி நின்புகழைத் துதிக்காத தவறு ஆகிய என்னுடைய அனைத்துப் பிழைகளையும் ஏகம்பனே நீதான் பொறுத்துக் கொள்ள வேண்டும்.

நான் இந்த மாயப் பொய் உடலை மெய் என்று நம்பிக் கோலவிழி மாதருடன் கூடி எழுத்தஞ்சும் ஓதாது மறந்து திரிகின்றவனாகிய என் உடலம் இறந்து கீழே விழும்போது அவ்வுடல் நரிக்குச் சொந்தமாகுமோ கழுகு பருந்து முதலியனவற்றிற்குச் சொந்தமாகுமோ ? நாய்க்கு இரையாகுமோ ? இல்லை நெருப்பிற்கோ ? அறியேன் என்று நிலையாமை பற்றி வருந்துகிறார்.

நம்மை மயக்கும் பெண்களை நாம் கண்ணென்றும் காதென்றும் மூக்கென்றும் சொல்லி மயக்க வரும்போது அவர்கள் எமன்

நமக்கனுப்பிய தூதர் என்பதை எண்ணாமல் இன்பம் தர வந்தவர் என்று அலைகிறோமே இறைவா ! இது சரியோ ? என்றும் பேசுகிறார்.

நமக்கு எது இங்கே நிலைக்கும் ? எதுவும் நிலைக்காது. பற்றுக்கோடாகவும் வாராது; ஊரார் நமக்கு நிலையானவர்கள் அல்லர்; உற்றார் உறவினரும் நிலையானவரல்லர்; பெற்ற பெருமைகளும் நிலையானதன்று. பெற்ற பிள்ளைகள் நிலையானவர்கள் அல்லர். சேர்த்த செல்வங்கள் துணைவர மாட்டா; உன் திருவடியைத் தவிர வேறு எதுவும் நிலையானதன்று. இறைவா நின் திருவடிகளே சரண் என்பதில் உறுதியாக இருந்தார் பட்டினத்தார். நாம் முன் செய்த தீவினைகளே பெண்ணுருவாகித் திரண்டு உருண்ட மார்பகங்களுடன் இறைச்சி தாங்கிய மேனியராய்ச் சலமும் உதிரமும் கொண்டு வரும்போது நாம் அக்குழிகளில் வீழ்ந்து ஏறும் கரை தெரியாது தடுமாறுகிறேன் இறைவா ! என்று வருந்துகிறார்.

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

21.03.16 ஸ்ரீமத் சிக்கல் ஆண்டவர் குருபூசை நடைபெற்றது.

22.03.16 அன்று கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரியின் நாட்டுத் தொண்டுத்திட்ட முகாம் தொடங்கி ஒருவாரம் நடைபெற்றது.

22.03.16 அன்று திருவாசகம் முற்றோதல் நிகழ்ந்தது. மாலையில் நூல் வெளியீட்டு விழா நடைபெற்றது.

23.03.16 அன்று கோவிலூர் முத்துராமலிங்க ஆண்டவர் குருபூசை சிறப்பாக நடைபெற்றது. அன்பர்களும், சாதுக்களும் திரளாகக் கலந்து கொண்டு குருவருளும் திருவருளும் பெற்றனர். அன்னதானம் மிக நல்ல முறையில் நடைபெற்றது.

24.03.16 அன்று கோட்டையூர் பெ.ராம. அண்ணாமலை அய்யா

குருபூசையும் மானாமதுரை நாராயண சுவாமி குருபூசையும், 02.04.16 அன்று சண்முகநாதபுரம் முத்தையா சுவாமி குருபூசையும் 06.04.16 அன்று காரைக்குடியில் சிவன் செயல் மடத்தில் குருபூசையும் 12.04.16 அன்று அண்ணாமலை ஐயா குருபூசையும் சிறந்த வழிபாட்டு முறைகளோடு நடைபெற்றன.

26.03.16 அன்று 26ஆவது இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் நமிநந்தி அடிகள் பற்றிச் சந்தக்கவிஞர் M.S. இராமநாதன் விரிவுரையாற்றினார். காப்பியக் கவிஞர் வரவேற்றார். கோவிலூர் ஆதீனம் ஆசியுரை வழங்கினார். நிறைவில் பேராசிரியர் கார்மேகம் நன்றியுரை நவின்றார்.

18.04.16 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கவின் கலைக் கல்லூரியின் தொடக்கவிழா நிகழ்ந்தது. சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் ஆசியுரை வழங்கினார்கள். முதலில் காப்பியக் கவிஞர் நா. மீனவன் அனைவரையும் வரவேற்றார். புகழ்பெற்ற இசை விமர்சகர் உயர்திரு சங்கரசேது தலைமையில் நிகழ்ந்த இவ்விழா இறை வணக்கத்துடனும் குத்துவிளக்கு ஏற்றிவைக்கப் பெற்றும் தொடங்கியது. திருவையாறு அரசு இசைக்கல்லூரியின் முன்னாள் முதல்வர் முனைவர் பேராசிரியர் திருமதி கௌசல்யா, கவின் கலைக் கல்லூரியைத் தொடங்கி வைத்துச் சிறப்புரை ஆற்றினார்.

தருமை ஆதீனப் புலவர், பன்னிருதிருமுறை மன்றத்தின் தலைவர், உழவாரம் இதழின் ஆசிரியர் பெருமைமிகு நீ.சீ. சுந்தரராமன் மற்றும் முனைவர் பெருமாள் (தஞ்சாவூர்) ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். பேராசிரியர் ம. கார்மேகம் நன்றிகூற நாட்டுப் பண்ணுடன் விழா இனிதே நிறைவு பெற்றது. விழாவில் அறங்காவலர்கள் உயர்திரு இராமநாதன் உயர்திரு கண்ணப்பன் உட்பட எழுத்தாளர் அய்க்கண், கம்பன் அடி சூடி போன்ற பெருமக்களும் சனாதன தர்ம உலகப் பல்கலைக்கழக அறிநிலைக் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள், பேராசிரியர்கள், ஆசிரியர்கள், அலுவலர்கள், மடாலய அலுவலர்கள்,மாணாக்கர்களும் கலந்து கொண்டனர்.

## மாணாக்கர்க்கு வாழ்த்து

### (கவிமாமணி)

வன்னிவனம் பேர்கொண்ட கழனி வாசல்
வளர்பயிரைக் காத்தவளாம் நெல்லை அம்மன்
எண்ணிவரும் அடியவர்க்கே இரக்கம் காட்டும்
ஏந்துகொற்ற வாளீசர் வீற்ற கோயில்
அன்னமிடும் திருமடமும் அருளைக் கூட்டும்
ஆண்டவரின் சந்நிதியும் அடியார் பல்லோர்
முன்னிருந்து வேதாந்தம் முழங்கும் சாலை
முயன்றமைத்த திருக்குளமும் சூழ்ந்த மூதூர்.

மூதூரைச் சிறப்பாக்கத் தமது வாழ்வில்
முயன்றெடுத்த செல்வங்கள் முழுதும் தந்தார்
மாதொருவன் வடிவாகி வந்த தேபோல்
மடத்தினிலே கொலுவிருந்த நாச்சி யப்பர்
தீதொருவர் கண்டாலும் தீங்கைத் தீர்ப்பார்
தேசுநிறை முகத்தினிலே கருணைத் தோற்றம்
கோதகற்றும் கல்விக்கே உலக தர்மக்
கோயிலெனப் பல்கலையைக் கொண்டு தந்தார்.

நாச்சியப்பர் கண்டபல கல்விக் கூடம்
நல்லமுறை நடத்திஅவை பேணிக் காப்பார்
மூச்செல்லாம் குருநாதர் வழியே என்று
முழுமனதாய்க் கல்லூரி நிறுவிக் காத்தார்
பேச்செல்லாம் அவர்பெயரே; நம்மைக் காக்கும்
பேரன்பு மெய்யப்ப சுவாமி நாவில் !
பாச்சுவையில் கலைகள்தரும் கல்வி யோடு
பலகல்வி கற்பிக்க வழிகள் செய்தார்.

அந்தவழி மெய்யப்ப சுவாமி கண்ட
அரியகலைக் கல்லூரி தன்னில் கற்று
முந்துகின்ற மூன்றாண்டை நிறைவு செய்து
முழுத்தேர்ச்சி பெற்றவராய் வாழ்க்கை நோக்கிச்
சிந்திக்கும் மாணாக்கர் வாழ்வில் செல்வம்
சேர்ந்திருக்க வாழ்த்திடுவோம் முதலில் வந்து
சொந்தமெனப் பயின்றவர்கள் சுகமாய் வாழத்
தொழுதிடுவோம் சுவாமிகளின் தாள்கள் போற்றி !

## துணிந்தால் துக்கம் இல்லை

### (பதிப்பாசிரியர், திருநெல்லை)

மனித வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் மாறி மாறிவரும். இன்பம் மட்டுமே நிறைந்ததாக வாழ்க்கை அமைவதில்லை. துன்பம் மட்டுமே அமைந்ததாக வாழ்க்கை இருப்பதில்லை. வெறும் இன்பத்தை மட்டுமே அனுபவிப்பவனின் வாழ்க்கை முழுமை ஆகாது. துன்ப உணர்வுகள், நிகழ்வுகள் அவ்வப்போது வந்து மறைவது தான் வாழ்க்கையின் நியதி ஆகும்.

ஒரு குழந்தை பிறந்து அது நடக்கத் தொடங்குகிற போது பலமுறை கீழே விழுந்துவிடுகிறது. ஆனால் அந்தத் தோல்வியால், விழுந்த துக்கத்தை எண்ணுவதில்லை; மேலும் முயல்கிறது; நடையைத் தொடங்குகிறது; நன்றாக நடக்கிறது. அதற்குக் காரணம் அந்தக் குழந்தைக்குள்ள துணிவும், நம்பிக்கையும் தான்.

மனித வாழ்க்கை முயற்சியில், துன்பங்களும் அவற்றால் உண்டாகும் துக்கங்களும் மிகுதிதான். இருப்பினும் மனிதன் அவற்றை எண்ணிக் கொண்டேயிருந்து வாழ்நாளை வீணாக்குவதில்லை. ஏதோ ஒரு நம்பிக்கையின் அடிப்படையில் எதிர்காலத்தில் வாழ வேண்டுவதற்கான வழிகளைத் தேடுகிறான்.

ஒன்றைப் பெற முற்படும்போது தடைகள் வருவது இயல்பு. அந்தத் தடைகளைக் கடந்து வெற்றி அடையும் போது பெறுகின்ற இன்பம்தான் உண்மையான இன்பம்; துன்பத்திற்குப் பிறகு கிடைக்கும்

இன்பம்தான் பெருமைக்குரியது. அப்போது தான் இன்பத்தின் பயனை முழுமையாகப் பெற முடியும்.

"இன்னா தம்ம இவ்வுலகம்

இனிய காண்கஅதன் இயல்புணர்ந் தோரே"

என்பது ஆன்றோர் வாக்கு.



இந்த உலக வாழ்க்கை துன்பமானது. அதன் இயல்பை உணர்ந்து இனிமை காண வேண்டுவது மனிதனின் கடமை.

தேர்வில் ஒருமுறை தோற்றவன் மறுமுறை தேர்ச்சி பெறுகிறான்; விளையாட்டில் ஒருமுறை தோல்வி கண்டவன் சோர்ந்து விடுவதில்லை. மறுமுறை வெற்றி பெறுவதற்குரிய வழிகளைத் தேடுகிறான்; வெற்றி பெறுகிறான். போர்க்களத்தில் ஒருவேளை உயிர் போய் விடலாம் என்று தெரிந்தாலும் அந்தப் போரில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டவன் ஒருபோதும் அஞ்சுவதில்லை; அவன் போரிலே இறந்தாலும் கூட, அது துக்கமாகக் கொள்ளப்படுவதில்லை. வீரச்சாவு பெற்றவன் என்னும் பெருமை அவனுக்குக் கிடைக்கிறது.

ஒரு மகனைப் போர்க்களத்தில் இழந்து, மறுநாள் போருக்கு அனுப்ப இன்னொரு மகன் இல்லையே என்று நினைத்த சங்ககாலத் தாயிடம் துக்கம் இல்லை; துணிவுதான் இருந்தது.

தேவையில்லாதவற்றுக் கெல்லாம் அஞ்சுபவர்கள் ஏராளம்; "அஞ்சி அஞ்சிச் சாவார்; இவர் அஞ்சாத பொருளில்லை அவனியிலே" என்று பாரதி கூறுவான்; ஏன் இத்தகைய அச்சம் ?

கடமையிலும் நேர்மையிலும் கருத்தாக இருப்பவன் எதற்கும் அஞ்சத் தேவையில்லை; அதிலும் துன்பம் வருமானால், பழிச்சொல் வருமானால் அவன் கவலைப் படுவதில்லை. கடமை உணர்வும், நேர்மை நெஞ்சமும் இல்லாதவன் தான் எதற்கும் எல்லோருக்கும் அஞ்சுகிறான்; தடுமாறுகிறான்; துக்கப்படுகிறான்; துன்பத்தைக் கண்டு அஞ்சாமல் தன்செயலில் துணிவுடன் இருப்பவனே, வாழ்க்கையில் வெற்றி பெறுகிறான்.

தீமை வந்தால் வந்து விட்டுப் போகட்டும் என்று தீயவற்றைச் செய்கிறவன் துணிவில்லாதவன். அவன், தனக்குத் தீங்குவரும் என்று தெரிந்தே செய்கிறான். ஆனால் நல்லது செய்யும் போது தீமை வரும் என்றாலும் பரவாயில்லை என்று நினைப்பவன், அந்தத் தீமையை எதிர் கொள்ளத் துணிந்து விடுகிறான்.

திருடிப் பிழைப்பவன் துணிவில்லாததால் தான் ஓடி விடுகிறான்; உழைத்துப் பிழைப்பவன் ஓடி ஒளிவதில்லை. திருடனுக்குத் துக்கம் உண்டு; உழைப்பவனுக்குத் துக்கம் இல்லை !

எந்த நல்லவொரு செயலைச் செய்யத் தொடங்கினாலும் என்ன துன்பம் வருமோ என்று எண்ணாமல் தொடங்கிய செயலைத் துணிந்து செய்தால் துக்கம் கிடையாது. "அச்சமில்லை அச்சமில்லை" என்று தொடங்கிச் செயலாற்றியதால் தான் இந்தியா சுதந்திரம் அடைந்தது. அது மனித வாழ்க்கைக்கும் பொருந்தும். துணிவு என்பதற்குத் தெளிவு என்று ஒரு பொருள் உண்டு. எதனையும் தெளிவோடும் துணிச்சலோடும் எதிர்கொண்டால் துக்கம் கிடையாது. அத்தகைய மனிதன் தான் இடுக்கண் வரும்போது சிரிக்க முடியும்.

மரணம் ஏற்பட்டு விடுமோ என்று அஞ்சிக்கொண்டே இருப்பவனுக்கு மரணநேரம் துக்கமாகிவிடும். மரணம் எப்போதும் வரலாம் என்று எதிர்பார்ப்பவனுக்கு மரணம் கூட மகிழ்ச்சி ஆகும். பிறர் மரணம் கண்டு துக்கப்படுகிறவன், தன் வாழ்நாளில் ஒவ்வொரு நாளும் சாவதைப் பற்றிக் கவலை கொள்வதில்லை. காரணம் நம்பிக்கை.

"இன்று புதிதாய்ப் பிறந்தோம்" என்று எண்ணினால் நேற்றைய துக்கம் மாறித் துணிவு பிறக்கும். துன்பம் வரும்போது துடைத் தெறிந்து விட்டு, இனிச் செய்ய வேண்டுவது என்ன என்று துணியும் போது தான் வாழ்வில் துக்கம் குறைகிறது. நல்லொழுக்கம் நற்செய்கை. நற்பண்பு கொண்டவனுக்குத் துன்பம் துக்கமாகாது; அதையும் அவன் தோள்தட்டி வரவேற்பான்; அவன்தான் துணிந்தவன்.

ஆதலால், வாழ்க்கையை வாழ்வாங்கு வாழவும் துக்கமில்லாத தாக்கவும் நல்ல மனத் துணிவு கொள்வோமாக !

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் “திருநெல்லை”**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்